# மழை சார்ந்த வீடு

சாம்பல் காளானைப் போலாகிவிட்டது உடல். எவரெவர் கரங்களோ என்னைத் தொட்டுப் புரட்டுகின்றன. விரல்களின் நகர்வில் பரும இயல்பு அழிந்த உடல் உணர்வு கொள்கிறது. கண்களை மூடியபடியே படுத்திருக்கிறேன். நடமாட்டச் சப்தமும் பேச்சுக் குரல்களும் மட்டுமே கேட்டுக்கொண்டிருக் கின்றன. எந்தக் காட்சியையும் பார்க்க முடியவில்லை. ஆயினும் கண்களின் உள்பரப்பினுள் எப்போதும் காலை வெயிலைப் போல ஒரு வெளிச்சம் இருந்துகொண்டே இருக்கின்றது. மீனின் சுவாசக் குமிழ் போல உடலினின்று வெக்கை வெளியாகிக் கொண்டிருக்கிறது. நெற்றியில் வைக்கப்படும் ஐஸ் கரைந்து முகமெங்கும் வழிகிறது. பனியின் துல்லிய நீர் படர்ந்து முக மெங்கும் சிலிர்ப்பு ஓடுகின்றது. வழியும் ஈரத்தினைத் துடைக்க வும் மறுக்கின்றது விரல்.

எதையும் சரிவர உணர இயலவில்லை. வெளியில் மழை பெய்து கொண்டே இருந்தது. மழைச் சப்தம் இரவும் பகலும் தொடர்ந்து எதிர்பாராத காலங்களுக்குள் என்னை இழுத்துச் செல்கின்றன. பாலை மணலில் மழை பெய்து ஓடுவதாகக் கனவு தொடர்ந்து கொண்டிருக்கின்றது. கிசுகிசுத்த குரலில் வயசாளிகளின் அபூர்வ முணுமுணுப்பை ஞாபகப்படுத்தி சுவரில் பெய்கிறது மழை. நீரின் அபூர்வ ரகசியம் வீடெங்கும் நிறைகிறது. நீர்த் தடங் களுடன் வீடெங்கும் பாதச் சுவடுகள். அம்மாவின் குரல். தங்கைகளின் வெளிறிய விரல்கள். என் உடல் மரக் கட்டிலின் உள் ஒடுங்கிப் படுத்திருக்கின்றது. வெக்கையும் குளிர்ச்சியும் ஒரே நேரத்தில் என்மேல் படர்கின்றன. கடிகாரம் நின்ற பின்பும் சுருள் வளைவில் துடிப்பு ஒன்று இயங்கிக் கொண்டே இருக்கின்றது. பனிக்கட்டியை வைக்கும் கை விரல்கள் மாறிக்கொண்டே

இருக்கின்றன. என் உடலின் புறத்தே எப்போதும் யாருடைய உருவோ என்னைப் பார்த்தபடி அமர்ந்திருக்கின்றது.

அம்மாவின் மெல்லிய விரல்கள் என் கண் இமைகளின் மீது படருகின்றன. நகர்ந்து நகர்ந்து விழி, அம்மாவின் விரல்களுடன் தன் துயரத்தைச் சொல்கின்றது. விழியின் அசைவை விரல்களால் உணர்ந்த அம்மா தனக்குள்ளாகவே கரைகிறாள். மழையின் ஊடே ஒடுங்கி நிற்கின்றன காகங்கள். மழையின் தீவிரம் இலைகளைப் பற்றிக்கொள்ள மரம் இலைகளை உதிர்த்தபடியே மழை கொள்கிறது. கல்மழை பெய்து பனிக்கட்டிகளைப் பொறுக்க ஓடுகிறார்கள் சிறுவர்கள். நான் ஓடிக்கொண்டிருக்கிறேன். என் முதுகில், உடலில் பட்டுத் தெறிக்கும் பனி மீறி அழைக்கிறது அம்மாவின் குரல். தெருவில் சப்தம் பெருகுகின்றது. சாக்குகளை முக்காடிட்ட ஆட்கள் மழையின் ஊடே மறைகிறார்கள். அம்மா வீடெங்கும் புகையிடுகிறாள். அறைகளை நிறைக்கின்றது புகை வாடை. மழை நிற்கவில்லை.

புரண்டு படுக்க வேண்டும் போலிருக்கின்றது. தலையைச் சரிப் படுத்தி வைக்கிறாள் அம்மா. கண்களைத் திறந்து அம்மாவைப் பார்க்க வேண்டுமென்ற ஏக்கம் அதிகமாகிக் கொண்டே இருக்கின்றது. வீட்டின் உள்புறமெங்கும் ஈரம் ததும்பிக்கொண்டே வருகின்றது. என்னை விட்டு விலகி அறைக்குள் போய்விட்ட சப்தம். நடக்கும் சப்தம். நீர் விலகிக் கேட்கும் குரல்.

புது வருடத்தின் மறுநாளில் ஜுரவேகம் அதிகமாக, அறைக்குத் திரும்பிக்கொண்டிருந்தேன். அறைக் கதவுகள் என் உயரத்தினின்று திடீரென அதிவேகமாக வளர்ந்து நின்றது போலாகி விட்டது. நண்பர்களற்ற தனியறையின் சுவர்களில் காரைகள் உதிர்ந்தபடி இருந்தன. எல்லா வழிகளிலும் சிடுக்குகளான நகரம் அலைக்கழித்துக்கொண்டிருந்தது. உஷ்ணம் உடலெங்கும் வழிய என்னைத் தேடி எவரேனும் வர மாட்டார்களா எனப் பார்த்தபடி அறையில் கிடந்தேன். நீண்ட பகலது. கடல் வெக்கையை மீறி அன்று மழை வந்தது. வாசல் கதவை அறைந்து ஜன்னலில் வந்து நின்றது மழை. யார் வருவார்கள்? தனித்தனி நபர்களாக வாழும் பெருநகரில் எவர் எவரைக் காண வருவார்கள். அறையில் வெப்பத்தின் கோடுகள் குறுக்கும் நெடுக்குமாக நிறைகின்றன. புத்தகங்களின் பழுத்த காகிதங்கள் உதிர்ந்து ஒடிகின்றன. நிறம் போன ஃபேனின் சுற்றலில் என் முகம் சுழன்று சுழன்று திரும்புகிறது. அறையின் தனிமையை வெட்டி வெட்டி

இறைத்தபடியே சுழன்றது காற்றாடி. ஊரை நோக்கிப் போகத் தூண்டுவதாக அறையின் எல்லாப் பொருள்களும் மாறிப் போயின. மழையோடு தெருவுக்கு வந்தேன். கைகள் நடுங்கு கின்றன. கவிழ்ந்த பல முகங்கள் அசைவற்று உறைந்து போயிருக்கின்றன. நிலக்காட்சிகளில் மாறாது பெய்கிறது மழை. நடுக்கம் உடலில் தீவிரமாக என் வசமிருந்து பிரிந்து உடல் தன் வசத்தில் இயங்கத் தொடங்க, பயம் அதிகமாகிக்கொண்டி ருந்தது. நினைவு மங்கிவிடுமோ? சிவப்புப் பாலமெங்கும் பூத்திருக்கின்றன மஞ்சள் பூக்கள். எல்லாமும் கோடுகளாகிப் புள்ளிபுள்ளியாக நிற வடிவம் கொள்கின்றது. ஒழுங்கற்ற ஆயிரக்கணக்கான கோடுகள்தான் பொருள்களா? மாலையின் வெளுத்த நீல நிறம் பரவ வீட்டின் முகப்பினைப் போய்ச் சேர்ந்திருந்தேன். எல்லாக் கதவுகளும் திறந்திருக்கின்றன. உள் அறையினை நீங்கி வெளித் தெரிகிறாள் அம்மா. வெளுத்த இலை நரம்புகளை ஞாபகமூட்டுகின்றன விரல்கள்.

உறங்கிக்கொண்டிருக்கிறேன் எனத் தெரிகிறது. கட்டிலின் மேல் அமர்ந்து என்னைப் புரட்டிய அம்மாவின் கரங்கள் என் உடலோடு சேர்ந்துவிட்டன. கடைசி முறையாக நான் அம்மாவைப் பார்த்தேன். அவள் தன்னுடைய இளம்பிராயத்தில் சிறுமியாக இருந்ததைப் போலவே எனக்குத் தெரிந்தாள். மூடிக்கொள்ளும் முன்பு அந்த முகத்தை மறுபடியும் பார்த்தேன். தங்கைகள் என்னைச் சுற்றி நிற்கிறார்கள். வாடிய கண்களுடனான சிறுமிகள் தங்கைகள்தானா! அவர்களின் கரங்களும் என்னைத் துடைக் கின்றனவே. பரணிலிருந்த மரக்குதிரைக்குப் போட்டியிட்ட சின்னவள் ஏன் இப்படி என்னைப் பார்த்துக்கொள்கிறாள். எதிர் நாற்காலியில் அமர்ந்துகொண்டிருப்பது யாராம். கைக் குழந்தை யும் தாயுமாக என் குரலுக்காகக் காத்துக்கொண்டிருந்த தங்கைகள் வெகு ஆழத்தினின்று என்னை நோக்கிக் கூப்பிடுகிறார்கள். மழை யாரையும் பேச விடுவதில்லையே!

மாறி மாறி நகர்ந்து போய்க்கொண்டிருந்த அப்பாவின் வேலை யில் நதி ஓடிக்கொண்டிருந்த ஊரில் அப்பா வேலையானார். அவருடன் குடும்பமே நதி பார்த்த வீட்டில் குடியேறியது. நடந்து பாதை இறங்கினால் நதியின் ஓட்டம். படித்துறைகள் உடைந்த நதி. மருத மரங்கள் அடங்கிய பாதை. மழைக்காலத்தில் நதியின் இயல்பு மாறிவிடும். வாத்துகள் அலையும் மணல்வெளியில் நடந்துவந்த அம்மா அடுத்த வீட்டுப் பெண்ணுடன் பேசிக்

கொண்டு வந்தாள். தனக்கு இன்னொரு பையன் வேண்டுமென்ற அவளது பேச்சைக் கேட்டுக் கைப்பிடியிலிருந்து திமிறி மணல் வெளியில் ஓடிப்போனேன்.

தன் விந்தைகளைத் தானே பார்த்தபடி சுருள் சுருளாகிப் பிரிந்து ஓடிக்கொண்டிருந்த நதியது. மீறிய இரவு. நதியினுள் போய் மூழ்கிக்கொண்டேன். என் உடலை மறைத்து ஓடிக்கொண்டிருக்கிறது நதி. அம்மாவும் தங்கைகளும் என்னைக் கூப்பிட்டபடியே நதியெங்கும் ஓடினார்கள். அவர்களின் அழைப்புக் குரல் நதியில் படர்ந்து ஓடியது. கைவிளக்குகளுடன் இரவெல்லாம் நதியில் அலைந்தாள் அம்மா. அவளுடன் ஒவ்வொருவரும் ஒரு சிம்னி விளக்கோடு என்னை அழைத்தபடி படித்துறைகளில் திரிந்தனர். எல்லோர் நிழலும் நீண்டு நதியின் மேலோடியது. தங்கைகளின் சின்னஞ்சிறு கைகளுக்குள்ளிருந்து வெளிச்சம் நதியில் படர்ந்தது. நான் நீரினுள் ஒளிந்துகொண்டுவிட்டேன். இருட்டு கரையாத நீரின் அடி ஆழத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். நீர்ப்பரப்பின் மீது அம்மாவின் விரல்கள் என்னைத் தேடுகின்றன.

வந்துவிட்டேன்! வந்துவிட்டேன்! - அவள் நீரில் தன் விரல்களை மூழ்கச் செய்கிறாள். இருள்படிந்த படித்துறைக் கற்களில் கறுப்பு வளையமிட்ட கண்களோடு என்னை எதிர்பார்த்து நிற்கிறார்கள் தங்கைகள். நதி இவர்களின் துயரம் தாளாது அடங்கி ஓடுகின்றது. கோரைப் புற்களின் ஊடே விளக்கை வைத்து நதி நீரில் இறங்குகிறார்கள் அவர்கள். வெளுத்த பாதங்கள். தேடும் விரல்களைக் கண்ட மீன் குஞ்சுகள் அடி ஆழத்தில் என் காதருகில் வந்து கிசுகிசுக்கின்றன.

போய்விட்டேன்! போய்விட்டேன்! - என் நகர்வின்மையைக் கண்ட மீன் குஞ்சுகள் பெருகி என்னைச் சுற்றிக்கொள்கின்றன. என் உடலெங்கும் மீன்களின் ஸ்பரிசம். மீன் குஞ்சுகளின் முகத்துக்காகவும் அதுகளின் இரக்கமிகு வார்த்தைகளுக்காகவும் நீரிலிருந்து வெளியேறுவதாக முடிவு செய்தேன். நான் வெளிப்பட்டது எதிர்க் கரையில். நீரிலிருந்து என் தலை உயரும்போது கோரைப் புற்களிலிருந்த விளக்கு உயர்த்தப்படுகிறது. வானும் நதிக்குமிடையில் வெளிச்சம் பரவி என் முகம் நோக்கி வருகின்றது. நான் அம்மாவைப் பார்த்தேன். அவள் நதியின் அடுத்த கரையில் நிற்கிறாள். தங்கைகள் கைவிளக்குகளோடு என்னை அழைக்கிறார்கள். அம்மாவை நோக்கி வர திரும்பவும்

நீரினுள் இறங்கும் என்னைக் கண்டதும் அம்மா திரும்பி வீட்டின் திசையை நோக்கி ஓடுகிறாள்.

அன்றிரவும் எனக்கு ஜுரம் கண்டது. என்னோடு சேர்ந்து படுத்துக்கொண்டாள் அம்மா. எல்லோரும் உறங்கிப் போய் விட்டார்கள். அவளுக்கு என் உடலை விட்டுப் போகும் சக்தியற்றுப் போய்விட்டது. என் கைகால்களை அசைக்க முடிய வில்லை. பாதங்களைச் சூடுபடுத்த தேய்க்கிறாள். உடல் எங்கும் மெல்லிய கோடு போல வெப்பம் ஏறி கண்களைத் தொடுகின்றது. என் கண் திறந்தபோது அம்மா என் வயதை ஒத்த சிறுமியைப் போல மாறி, கரைந்துகொண்டிருப்பதை அப்போதுதான் முதல் முறையாகப் பார்த்தேன். அவள் அன்றிலிருந்து என்னோடு பேசுவதைத் தவிர்த்து வந்தாள். நதியைப் பிரிந்து வந்த பின்பும் கூட அவள் என் உடலினை விட்டு விலக சக்தியற்றவளாகவே இருக்கிறாள். ஆயினும் இப்போது என்ன பேசுகிறாள்?

நான் கண்களைத் திறந்து எதையுமே பார்க்கவில்லை. மழை எதைப் பார்க்க அனுமதிக்கிறது. இயல்புகளைக் கரைத்து வடியச் செய்யும் மழையில் பொருள்கள் தலை கவிழ்ந்து நிற்கின்றன. வீட்டில் நடமாட்டம் ஓயவில்லை. அவரவர் வழியில் நடமாட்டச் சப்தம் பெருகிக்கொண்டே இருக்கின்றது. என் மீது வழியும் பனியைத் துடைத்துக்கொண்டே இருக்கும் தங்கையின் கண்களையும் கரங்களையும் பார்க்காமலே உணர முடிகிறது. பல முறை சண்டையிட்டுப் பிரிந்து விரோதம் கொள்ள நேர்ந்த போதும் ஏன் அவர்கள் எதையும் நினைவில் கொள்ளவில்லை.

அவர்களுக்குப் பிராயத்தில் என் மீது கசிந்த வெறுப்புகள் மங்கிப் போய்விட்டன. எதிர்த்து ஆடிய பரமபத விளையாட்டு ஏணிகளில் அவர்கள் மேலே போய்க்கொண்டிருக்கிறார்கள். என் சோழி பாம்பின் வாலில் இறங்கி அடைய முடியாத தெப்பம் பார்க்கின்றது. தங்கைகள் ஆட்டம் முடிந்து போய்விட்டார்கள். நூறு கட்டங்களின் பரமபதத்தைச் சுருட்டி மறைவிடத்தில் ஒளித்தாள் அம்மா. மழை பெய்துகொண்டே இருக்கின்றது. நீர்த் தவளைகளின் உலகம் நீரால் விழிக்கின்றது.

இன்றைய தினம் எனக்கானதல்ல. இப்போதும் எனக்கான திராட்சைகளை அம்மா மூடிய கண்ணோடு கிண்ணத்தில் எடுத்தே வைத்திருக்கிறாள். அவளுடைய அறையில் எனக்கு மட்டுமேயான இடம் யாருமற்று இருந்துகொண்டே

இருக்கின்றது. என்னிடமிருந்து பிரிந்த மண் வாத்துகள் கூட அவள் அறையில்தானிருக்கின்றன. மூடிய கண்ணாடிக் கிண்ணத்தில் கிடக்கும் திராட்சைகள் வெளியில் அலையும் என் கண்களை அவளுக்குத் தினமும் ஞாபகமூட்டியபடியே இருக்கக் கூடும். அவள் தனியே வாழ்ந்துகொண்டிருக்கிறாள். அப்பாவின் காலத்தினுள்ளும் கூட அவள் அறையில் நூல்வலை ஒன்று சுற்றித் தொங்கவிடப்பட்டிருக்கும். அதனுள் கலர் நூல்களுடன் எதையாவது பின்னிக்கொண்டிருப்பாள். ஆள் உயரக் கண்ணாடி யொன்று அம்மாவின் பல்வேறு காலங்களை மாறி மாறிக் காட்டியபடி தோன்றி மறைந்துகொண்டிருந்தது.

கடைசித் தங்கையைப் பிறந்த குழந்தையாக எடுத்துவந்து உறங்கிக்கொண்டிருந்த அம்மாவை பள்ளியின் மதியம் விலக்கி வந்து வெயிலின் நகர்வைப் போல நான் கதவை விலக்கிக் கண்டபோது கண்ணாடியினுள் அம்மா எல்லோராலும் கைவிடப் பட்ட இரண்டு வயதுக் குழந்தையைப் போல தனியே உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவளின் கண்கள் மெல்லிய பச்சை படர்ந்து எதற்கோ இறைஞ்சிக்கொண்டிருந்தன. என்னைப் பக்கத்தில் அழைத்து வைத்துக்கொண்டாள். அவளது வெளிறிய உடலில் பால்மணம் அடித்தபடி இருந்தது. அம்மா குழந்தையின் விரல்களை பிடித்து எனக்குத் தந்தாள். அந்த அறைக்கு அபூர்வமான ஒளியிருந்தது. ஒவ்வொரு சிறு பொருளும் அதிசய மாயின. முன் அறியாத எவரோ போல அவள் தோன்றினாள். நெளியும் கூந்தலை முன் இழுத்துவிட்டு சாய்ந்து கொண்டி ருந்தாள். மாலை முடியும்வரை நான் அந்த ஒளியைக் கண்டேன். அம்மாவின் வயது கண்ணாடியில் ஒளிந்திருப்பதை அன்றுதான் கண்டுகொண்டேன்.

பேசாமல் தூங்கு! எதையும் யோசியாதே! - திரும்பத் திரும்ப தங்கைகளின் குரல்கள் என் மீது மோதுகின்றன. ஜுர வேகத்தில் புலம்பத் தொடங்கியிருப்பேன் போலும். கேட்டுக்கொண்டே இருக்கும் மூன்று குரல்கள் தொடர்கின்றன.

பேசாமல் தூங்கு! எதையும் யோசிக்காதே! - என்னால் இணங்க முடியவில்லை. கண்களுக்குள் வெளிச்சம் ஒளிர்ந்து கொண்டி ருக்கிறதே. பிதற்றிக்கொண்டிருக்கும் என் ஞாபகம் எனக் கில்லை. அந்தக் குரல்கள் கவலை கொள்கின்றன. 'அம்மா நீ வந்து தூங்கச் சொல்லேன். ரொம்ப புலம்புறான்.'

என் நெற்றி, உடலெங்கும் திருநீறு இடுகிறார்கள். காலையின் வெம்பா பெய்யும் வாடை. படிக்கட்டில் உட்கார்ந்திருக்கும் என்னை விட்டு அம்மாவும் தங்கைகளும் நதிக்குச் செல்கிறார்கள். ஒரே விதமான நடை. இரட்டைக் குழந்தைகள் செல்வது போலி ருக்கிறது. நதி அவர்களுக்காக காத்திருக்கின்றது. இரவெல்லாம் யாரும் ஸ்பரிசிக்காத நீரை தங்கையின் விரல்கள் தொட நதி சிலிர்ப்புடன் ஓடுகின்றது. கள்ளம் கொண்ட கண்களுடன் அவள் அம்மாவைக் கட்டிக்கொள்கிறாள். எல்லாமும் வேண்டுமென்றே செய்கிறாள். அவளுக்கு அம்மாவை விட முடியாது. நீரினுள் யார் முகமும் தெரியவில்லை. நீரினுள் கண்களைத் திறந்து பார்த்துவிட எவ்வளவோ எத்தனிக்கிறாள் தங்கை. எதுவும் சாத்தியமில்லை. அம்மாவை சுற்றிக்கொண்டது நீர். மிதக்கும் இலைகளை விலக்கி எழுந்து வரும் தங்கை காத்திருக்கிறாள்.

இருவரும் பிரிந்து வருகிறார்கள். தன்னோடு யாருக்கும் உறவில்லை என்பது போல அலாதியாக வரும் அவளுடன் தெரு நிசப்தம் கொண்டிருக்கிறது. சந்தனக் கீற்றை நெற்றியில் இடும் போது கண்ணாடி அம்மாவின் வசீகரத்தைக் கண்டு கொண்டி ருந்தது.

குரல்கள் அடங்கிவிட்டன. மழைச் சப்தம் ஓய்ந்த அமைதி. மழை வெறித்த மரங்களைப் போல வெளிறி உஷ்ணமற்றுப்போனது உடல். நதி உருமாறி முதுகெலும்புக்குள் நிசப்தமாக ஓடும் சில்லிடல் மட்டும் மறையவில்லை. போர்வையால் என் உடலை மூடிக்கொள்கிறேன். எழுந்துகொள்ள வேண்டும் போல் இருக் கிறது. அசதியும் பலமுமற்ற கால்கள் உடலோடு ஒத்துழைக்க மறுக்கின்றன. வெகு சிரமத்துக்குப் பிறகு எழுந்துகொள்கிறேன். பச்சை நிற வெளிச்சம் ஒளிர்ந்துகொண்டிருக்கிறது. வீடெங்கும் மழை ஈசல்கள் உதிர்ந்து கிடக்கின்றன. கண்ணாடி இறக்கைகள் சுவரில் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. மிக மெதுவாக அம்மாவின் அறைக்குப் போய்ச் சேர்ந்தேன்.

அந்த அறையில் எந்தப் பொருளுமில்லை. கண்ணாடி திரைச் சீலையிடப்பட்டிருந்தது. பூக்கள் படர்ந்த தரை. கண்ணாடியை விலக்கிப் பார்த்தேன். வெகு நீண்ட தூரத்தின் பின் நதிக்கரையில் அம்மா இருக்கிறாள். அவளைச் சுற்றிலும் பழுத்த இலைகள் உதிர்ந்து கிடக்கின்றன. அவள் முகம் உள்ளே போய்க்கொண்டே இருக்கிறது. மூச்சு சப்தம் கண்ணாடியைப் படபடக்க வைத்து படிகின்றது. புறாக்களின் முனங்கல். கண்ணாடியை மூடி

விட்டேன். அடுத்த அறையில் இருந்து எழுந்து அம்மா வந்திருந்தாள். அவள் அறைக்குள் அவள் போவதில்லை. மெலிந்த திரேகியாக இருந்த அவள் சமீபத்தில் வந்து நின்றாள். அவளை விடவும் உயரம் அவன். அவனையே உற்றுப் பார்க்கும் அவளைப் பார்த்தபடி இருந்தான். திடீரெனத் திடுக்கிட்டு தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக்கொண்டான். அப்படியே இருந்தது. வேதனை மிக்க சிறுமியின் கண்களேதான் தனக்கும் இருந்தன. அவனின் பெண்முகம் அம்மாவின் முகமாகவே இருந்தது.

ஒவ்வொரு முறையும் அவளை அவளே பார்த்துக்கொள்வது போலவே அவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். இரு வருக்குமே துயரம் தோய்ந்த முகம். அவனை அந்த அறையை விட்டு வெளியே அழைத்து வந்தாள். படுக்கையில் திரும்பவும் படுத்துக் கொண்டான். எதையோ சொல்ல முயன்று பேச முடியாமல் போய்விட்டாள். மீன்கள் காதருகில் சொல்லின. ''எதையும் யோசியாமல் தூங்கேன்.''

எந்த நினைவிலிருந்தும் தப்ப முடியவில்லை. மீண்டும் கண்களை மூடிக்கொண்டேன். ஈரக்காற்று அடிக்கின்றது. கண்களின் உள்ளிருந்த வெளிச்சத்தை மெல்ல ஈரம் மூடி இருள் கவியத் தொடங்கியது. அம்மாவின் அழைப்புக் குரல் கேட்டுக் கொண்டிருக்க கண்ணாடியில் எதையும் பேசாது மீன் குஞ்சுகள் நீந்திக்கொண்டே இருந்தன.